[29th August 1961

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir. Some managements of Secondary Schools are reported to have raised the tuition fees with a view to implement the revised scales of pay.

(*b*) No, Sir.

(*c*) This does not arise.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், இப்படி தனியார் நடத்தக்கூடிய சில பாடசாலைகளில் சம்பள உயர்வு செய்ததின் காரணமாக பல ஏழை மாணவர்கள் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பது சர்க்காருக்கு தெரியுமா ? இவ்விதம் வித்தியாசம் இல்லாமல் எல்லாப் பாடசாலைகளிலும் ஒரே மாதிரியாக சம்பள விகிதம் இருக்க சர்க்கார் ஏதாவது ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சர்க்கார் நடத்தக்கூடிய பள்ளிக்கூடங்களில் சம்பளம் அதிகமாக இல்லாவிட்டாலும், பல பள்ளிக்கூடங்கள் ஸ்தல ஸ்தாபனங்களால் நடத்தப்படுகின்றன. இது தவிர கணக்கில்லாமல் தனியார் பள்ளிக்கூடங்களில் சம்பளத்தை உயர்த்திவிட முடியாது. இதை அனுசரித்துத்தான் ஏழை குழந்தைகள் இலவசமாக படிக்கலாம் என்று அரசாங்கம் திட்டம் கொண்டுவந்திருக்கிறது.

*Legislature Proceedings (Publication of)*

* 1465 *Q*.—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Government have been approached by the Press seeking unqualified freedom in the matter of publication of the proceedings of the Madras Legislature; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) No.

(*b*) Does not arise.

SRI R. SRINIVASA IYER : இந்த சட்டசபை நடவடிக்கைகளைப் பிரசுரம் செய்வதிலே பிரசுரகர்த்தாக்களுக்கு ஒரு பாதுகாப்பு வேண்டுமென்று சென்ட்ரல் கவர்ன்மெண்டில் ஒரு சட்டம் போடப்பட்டிருக்கிறது. அந்த வகையிலே ஸ்டேட்டிலேயும் போடவேண்டுமென்று சொல்லப்படுகிறது. இந்த ஸ்டேட்டில் அந்த மாதிரி ஒரு சட்டம் நிறைவேற்றப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இது அவசியமில்லை என்பது எனது கருத்து. இங்கு நடக்கும் நடவடிக்கைகளை வெளியில் பிரசுரித்தால் சட்டத்திற்கு விரோதமாக ஏதாவது இருந்தால் அப்போது டெஃபமேஷன் போடலாம். நம் சட்டசபையில் சட்டத்திற்கு விரோதமாக இருக்கக்கூடிய நடவடிக்கையே ஒன்றும் இல்லாததால் அதற்காக ஒரு சட்டம் போட்டு அந்த முறையில் தான் பிரசுரிக்க வேண்டுமென்று சொல்ல வேண்டிய நிலை இல்லை என்று நினைக்கிறேன்.

29th August 1961]

**Sri M. KALYANASUNDARAM :** நம் சட்டசபை சட்டத்திற்கு உட்பட்டு முறையாக நடக்கிறது என்பதை ஒத்துக்கொள்கிறேன். அதன் அர்த்தம் இங்கே சிலரைப்பற்றி விமரிசனம் செய்வதையெல்லாம் அப்படியே பிரசுரிக்க முடியும் என்பதல்ல. தனி நபர் பற்றியோ அல்லது ஒரு ஸ்தாபனம் பற்றியோ இங்கே பேச உரிமை இருக்கிறது. அந்த நடவடிக்கைகளை அப்படியே பிரசுரித்தால் கட்டாயம் அவர்கள் பாதுகாக்கபடமாட்டார்கள். பொது மக்கள் இங்கே நடக்கக்கூடிய நடவடிக்கைகளை அறிந்து கொள்ளும் முறையில் பத்திரிகைகள் அவைகளை அப்படியே பிரசுரிக்க வேண்டுமென்று உத்தேசித்து இந்த மாதிரியான ஒரு சட்டத்தைக் கொண்டுவந்து நிறைவேற்றுவார்களா என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri C. SUBRAMANIAM :** இங்கேகூட தனிப்பட்டவர்களைக் குறித்து அவதூறாக பேசுவது கிடையாது. அவதூறாகப் பேசாமல், அவர்களுடைய நடவடிக்கைகளில் குற்றம் கண்டுபிடித்துப் பேசினால் அவைகளை இப்போதும் பிரசுரிக்கலாம். அதில் தவறு ஒன்றும் கிடையாது. தனிப்பட்டவர்களைப்பற்றி டெஃபமேஷன் குற்றம் வரும்படியான அளவுக்கு இங்கே பேசினால் அதைப் பிரசுரம் செய்ய வேண்டுமானால், அந்த சுதந்திரம் இல்லாமல் இருப்பது நல்லது.

**Sri M. KALYANASUNDARAM :** அமைச்சர் அவர்கள் சொல்லும் சமாதானத்தை ஒத்துக்கொள்ளுவதானால், பார்லிமெண்ட்டில் சட்டவிரோதமான நடவடிக்கைகள் நடக்கின்றன. அதனால்தான் அங்கே இத்தகைய ஒரு சட்டத்தைக்கொண்டு வந்திருக்கிறார்கள் என்று சொல்லுகிறார்களா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** அங்கு எந்த சூழ்நிலையில் இந்தச் சட்டத்தை ஏற்படுத்தினார்களோ, நம் சூழ்நிலையைப் பொருத்த வரையில் இந்தச் சட்டத்தை நிறைவேற்ற வேண்டிய அவசியமில்லை என்ற முடிவுக்குத்தான் வந்திருக்கிறோம். பார்லிமெண்டில் அங்கு இருக்கும் நிலைமையை ஆலோசித்து சட்டம் செய்கிறார்கள். நம்முடைய நிலைமையைத்தான் விளக்க முடியுமே தவிர மற்றவர்களுடைய நிலைமையைப்பற்றி விளக்க முடியாது.

*Poramboke lands (Assignment of)*

DEPUTY SPEAKER : As the hon. Member who gave notice of question No. 1466 is not in his seat, the question and answer will be printed in the proceedings.

1466 *Q.*—**Sri A. R. MARIMUTHU :** கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லா நெம்மேலி திப்பியக்குடி கிராமத்திலுள்ள சர்க்கார் புறம்போக்கு நிலங்களை ஜாரி செய்யவேண்டுமென்று விவசாயிகளால் மனுக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றனவா ?